கிறபோது மாற்றிக்கொள்ளுகிறார்கள். ஆனால், எந்த எந்த முறைகளைக் கையாள்கிறார்கள் என்று இங்கே சொன்னால் பயன் இல்லாமல் போய் விடும்.

SRI M. KALYANASUNDARAM : குற்றவாளிகளிடமிருந்து உண்மையைப் பெருவதற்காக, போலீசார் குற்றவாளிகள் நகத்தில் ஊசி ஏற்றுவது போன்றதை கனம் அமைச்சர் அவர்கள் அறிவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பலாத்காரத்தைப் பற்றி கனம் அங்கத்தினர் அதிகமாக அறிவார்கள். திருஷ்டாந்தமாக ஒரு பெரிய மனிதர் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள மறுத்தார். உடனே போலீசார் நீங்கள் அப்படி மறுத்தால் வேறு வழியில்லை உங்களை விலங் கிட்டு தெருக்கள் வழியாக அழைத்துச் செல்லப்படும் என்று சொன்ன உடனே, அவர் கண்ணீர்விட்டு தன் குற்றத்தை ஒப்புக்கொண்டார். இம் மாதிரியான முறைகள்தான் கையாளப்படுகிறது.

*Dredgers*

*1606 *Q*.— SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் ஏரிகளில் தூறு எடுப்பதற்கான கருவிகள் அல்லது யந்திரங்கள் எத்தனை செட்டுகள் உள்ளன ?

(இ) இப்போது எந்தெந்த ஜில்லாக்களில் தூறு எடுக்கப்பட்டு வருகிறது ?

(உ) மேலும் தூறு எடுக்கும் கருவிகளை அதிகமாக வாங்குவதற்கான உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) There are 4 sets of machinery at present ;

(இ) Chingleput, North Arcot and South Arcot Districts ; and

(உ) Yes, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த இயந்திரங்கள் எப்போது எந்த ஆண்டிலே வாங்கப்பட்டது, எந்தெந்த ஜில்லாக்களில் இந்த முறையில் தூர் எடுக்கப்பட்டது என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜில்லாவில் வாங்கிய பழைய இயந்திரங்கள் நீர்ப்பாசனத்திற்காக எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். புதி தாக இன்னும் வாங்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : இயந்திரங்கள் வாங்கிய பிறகு செங்கல்பட்டு ஜில்லாவில்தான் வேலை ஆரம்பிக்கப்பட்டது. வட ஆற்காடு ஜில்லாவில் வேலை ஆரம்பித்ததாக புஸ்தக அளவில்தான் இருக்கிறது. வேலைகளை ஆரம்பிக்கவில்லை. போதுமான இயந்திரங்களை வாங்கி உடனே ஏரி மராமத்து செய்து தூர் எடுக்க துரித நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; முதலில் செங்கல்பட்டு ஜில்லாவில்தான் பரீட்சார்த்தமாக ஆரம்பிக்கப்பட்டது. பிறகு வட ஆற்காடு ஜில்லாவில் ஏற்பாடு செய்யப்பட்டது. அதன் பிறகு மற்ற ஜில்லாக்களுக்கு விஸ்தரிக்க ஏற்பாடு செய்யப்படும்.

*Drainage Scheme (Pattuvanachi)*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of the question No. 1607 is not in his seat, the question and answer will be printed in the proceedings.